[9th September 1958

THE HON. SRI M. A. MANICKAVELU : The staff at the Family Planning Centres have been instructed to give instructions relating to family planning and supply literature on it only to married persons.

SRI S. LAZAR : இப்பொழுது சர்க்கார் பிரசுரங்களை விற்கக் கூடிய அத்தனை கடைகளிலும் இப்புத்தகங்கள் கிடைக்கின்றன அல்லவா ? இவைகளை சிறுவர்களுக்கும், கல்யாணம் ஆகாதவர்களுக்கும் விற்பதை தடுக்கும் முறையில் அல்லது அவர்களுக்கு இவைகள் கிடைக்காத முறையில் செய்வதற்கு வேண்டிய நிலைமையை ஏற்படுத்த சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இவைகள் மற்றயிடங்களிலும் கிடைக்கலாம். ஆனால் அதற்கு வேண்டிய மிக அவசியமான சில விஷயங்களைச் சொல்லிக் கொடுப்பது "க்ளினிக்"கில்தான். அவைகள் பிரசுரங்களில் இல்லை.

SRI D. S. ATHIMOOLAM : இந்த குடும்பக் கட்டுப்பாடு விஷயமாக ஜில்லா தலைநகர ஆஸ்பத்திரிகளில் உள்ள வசதிகளைப் போல் தாலூகா தலைநகர ஆஸ்பத்திரிகளிலும் அம்மாதிரி சிகிச்சை செய்ய வேண்டிய வசதியளிக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கொஞ்சம் கொஞ்சமாக இதை விஸ்தரித்துக் கொண்டே போகிறோம். இப்பொழுது ஜில்லா தலைமை ஆஸ்பத்திரிகளில் இருக்கின்றன. தாலூகா தலைமை ஆஸ்பத்திரிகளுக்கு பிறகு வரலாம்.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : குடும்பக் கட்டுப்பாட்டை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று முயற்சிக்கிற இந்த சர்க்கார் சினிமாக்களில் காதல் கட்டங்களை அதிகமாக காட்டும் படங்களை அனுமதிப்பது ஏன் என்று அமைச்சர் அவர்கள் அதற்கு ஒரு விளக்கம் தருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : காதல் வெறும் காதல் அளவிலேயே நின்று விட்டால் குடும்பக் கட்டுப்பாடே வேண்டியதில்லை.

SRI A. GOVINDASAMY : குடும்பக்கட்டுப்பாடு விஷயத்தில் இங்கு வீற்றிருக்கிற எட்டு அமைச்சர்களுக்கும் ஒருமித்த கருத்துண்டா ? அல்லது வேறுபாடான கருத்துக்கள் உள்ளவர்கள் இருக்கிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: அவர்களின் மனது எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்தவரையில் வித்தியாசம் ஒன்றுமில்லை.

### *Higher Technological Institute*

* 124 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கிண்டியில் ஆரம்பிக்கப்படப்போகும் உயர்தர கைத்தொழில் கலை நிலையம் (**Higher Technological Institute**) வேலை எப்போது ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கிண்டியில் ஆரம்பிக்கப்படப் போகும் உயர்தர கைத்தொழில் கலை நிலையம் மத்திய அரசாங்கத்தால் ஏற்படுத்தப்பட இருக்கின்றது. 1959-ம் ஆண்டிலிருந்து இந்நிலையம் துவங்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

### *Most Backward Classes*

* 125 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the principles followed by the Government in preparing the list of Most Backward Classes;

9th September 1958]

(b) whether "Parakavakula (Nathaman, Malayaman, Surathiman, Moopanar and Nainar)" has been included in the list of Most Backward Classes; and

(c) if not, the reasons therefor?

THE HON. SRI P. KAKKAN: (a) The communities, which are found to be almost as backward as the Scheduled Castes, but could not be classified as such, as they do not satisfy the criterion of untouchability are included in the list of Most Backward Classes.

(b) No, Sir.

(c) The community was not considered to be as backward as the other communities included in the list of Most Backward Classes.

SRI K. B. S. MANI: சர்க்கார் ஜாதி பேதமில்லாமல் எல்லா ஏழைகளுக்கும் அவர்களது வருமானத்தை வைத்து அவர்களுக்கு உதவி செய்வது என்று நிர்ணயித்திருக்க இம்மாதிரி புதிதாக ஒரு பட்டியலை தயாரிக்க வேண்டியது அவசியம் என்று சர்க்கார் கருதுகிறதா?

THE HON. SRI P. KAKKAN: இப்பொழுது ஒன்றும் புதிதாக பண்ணவில்லை. ஏற்கெனவே பண்ணினதுதான்.

SRI M. R. KANDASWAMI MUDALIAR: மிகவும் ஏழைகளாகவும், வாழ்க்கையில் வசதிக் குறைவாகவும் இருக்கக்கூடிய நெசவாளர்களுக்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் மிகவும் பின் தங்கிய வகுப்பினர் என்று கல்விச் சலுகை அளிக்க சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI P. KAKKAN: இப்பொழுது சமூகத் துறையிலும் பொருளாதாரத்துறையிலும் பின் தங்கியவர்களுக்குத்தான் இந்த வசதி அளிக்கப்படுகிறது.

### *Roads*

*125-A *Q.*—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1955-ம் வருஷம் நவம்பர் மாதம் 29-ம் தேதியில் 2923-ம் எண் கேள்விக்கு கொடுத்த பதிலையொட்டி, கோயமுத்தூர் ஜில்லாவில் எத்தனை சேரி ரஸ்தாக்கள் செப்பனிடப்பட்டிருக்கின்றன?

THE HON. SRI P. KAKKAN: In Coimbatore district 72 approach roads to Harijan colonies have so far been repaired.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—ADJOURNMENT MOTION.

### ATTACKING OF PASSENGERS AND STABBING OF THE ASSISTANT STATION MASTER, KODAMBAKKAM RAILWAY STATION ON 8TH SEPTEMBER 1958 BY ARMED MEN.

MR. SPEAKER: I have received notice of three adjournment motions from three hon. Members, namely, Sri A. Govindasamy, Sri M. Kalyanasundaram and Sri K. Vinayakam to discuss a matter of urgent public importance, namely, (1) attacking of passengers and stabbing of the Assistant Station Master, Kodambakkam Railway Station, by armed men on the 8th September 1958 at about 1-30 p.m. and the failure of the Government to give protection to the travelling public and officials; (2) the prevalence of a